


# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

"சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்-
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 64 திருவள்ளுவர் ஆண்டு 2056, மடங்கல் (ஆவணி) – செபுதம்பர் – 2025



# கால்நடைப் பேணுகைத் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Anthrax | – | அடைப்பான் |
| Black quarter | – | சப்பை நோய் |
| Bottle jaw | – | தாடை வீக்கம் |
| Cattle insurance | – | கால்நடைக் காப்பீடு |
| Cross breed | – | கலப்பினம் |
| Dry period | – | கறவை வற்றிய பருவம் |
| Entomology | – | பூச்சியியல் |
| Grower farms | – | வளர்ப்புப் பண்ணைகள் |
| Hook worm | – | கொக்கிப் புழு |
| Leptospirosis | – | மென் சுருளி நோய் |
| Manger | – | மாட்டுத் தொழுவம் |
| Mastitis | – | பால்மடி வீக்கம் |
| Molar | – | கடைவாய்ப் பல் |
| Pack animal | – | பொதி விலங்கு |
| Pigsty | – | பன்றிக் கொட்டில் |
| Pisciculture | – | மீன் வளர்ப்பு |
| Pound | - | பட்டி |
| Prophylaxis | – | நோய் முன்தடுப்பு முறை |
| Quailery | – | காடைப் பண்ணை |
| Rinderpest | – | வெக்கை நோய் |
| Ring master | – | வட்டரங்கு விலங்காட்டி |
| Rodent | – | கொறி விலங்கு |
| Trypanasomiasis | – | உறக்க நோய் |
| Tympanitis | – | வயிறு உப்புசம் |
| Urticaria | – | தோல் முடிச்சு வீக்க நோய் |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2056, மடங்கல் (ஆவணி) **செபுதம்பர் – 2025**

ஆசிரியர் : திருமதி **க. பவானி**
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் **வே. கார்த்தி**

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

# தமிழ்ச் சொற்பிறப்பு அறிவோம் – 'வெள்' 'வேள்'

தமிழ்ச் சொற்பிறப்பு வரலாற்றை ஆய்ந்த மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், வெள்' 'வேள்' என்னும் சொற்களிலிருந்து ஏனைய சொற்கள் கிளைத்து வளர்ந்த முறையினைக் கீழ்க்காணுமாறு விளக்கியுள்ளார்.

**வெள்**

வெள் = வெள்ளையாகு
வெளி = வெள்ளையான இடம்
வெட்ட = வெள்ளையான
வெள்ளாளன் = வெண்களமன்
வெள்ளாட்டி = வெள்ளாளப்பெண், வேலைக்காரி
வெள்ளரி = வெண்கோடுள்ள காய்
வெள்ளை = வெள்ளைத் துணி, சுண்ணாம்பு, கள்ளமற்றவன்
வெள்ளந்தி = கள்ளமின்மை
வெள்ளம் = வெள்ளையான புது நீர்
வெள்ளி = வெள்ளையான மாழை (உலோகம்), உடு (நட்சத்திரம்)
வெள்ளிலை = வெற்றிலை
வெள்ளில் – விள – விளா – விளவு = வெள்ளோடுள்ள பழமரம்
வெளில் – வெளிறு = வெள்ளை மரம்
வெளு = வெள்ளையாக்கு, துவை, அடி
வெள்கு – வெட்கு = நாணத்தால் முகம் வெளு
விளங்கு = ஒளிவிடு, புலனாகு
விளக்கு = விளங்கச் செய்வது

**வேள்**

வேள் = விரும்பு
வேள் –வேண்டு = விரும்பு, கெஞ்சிக் கேள்
வேள் – வேண் + அவா = வேணவா
வேட்கை = விருப்பம், தாகம், விடாய் = விருப்பம், தாகம்
வேள்ளி = ஒன்றை விரும்பிச் செய்யும் யாகம்
வேளாண்மை = விரும்பிச் செய்யும் விருந்தோம்பல்
வேளாளன் = உழவன்
வேளிர் = ஒரு குலத் தலைவன், குறுநில மன்னன்
வேளாண் குடி = உழவர் குடி
வேளாண் = ஒரு பட்டம்
வேளாட்டி = வேளாளப் பெண்
வேளம் = வேளாளப் பெண்டிர் சிறைக்களம்
வேண்மகன் – வேண்மான் = குறுநில மன்னன்
வேட்டம், வேட்டை = விரும்பி விலங்கைப் பிடித்தல்
வேட்டுவன், வேடுவன், வேடன் = வேட்டையாடுபவன்

இவ்வாறு தமிழ்மொழியின் சொற்பிறப்பு வரலாறு குறித்து மொழிஞாயிறு பாவாணர் எழுதியுள்ள செய்திகளை நாமும் உணர்ந்து வருங்காலத் தலைமுறையினருக்கும் உணர்த்தி அவர்களின் உள்ளங்களில் தாய்மொழிப் பற்றை விதைப்போம்.

# இயற்கைப் பாலும் இலக்கணப் பாலும்



முனைவர் இரா.கு.ஆல்துரை
தமிழ்நாட்டரசின் வீரமாமுனிவர் விருதாளர்

பால் என்ற சொல் பகுப்பு, பகுதி, பிரிவு போன்ற பொருள்கள் உடையது. பகு என்ற வினையடியிலிருந்து உருவான பகல் என்ற சொல்லின் இடையிலுள்ள ககரம் மறைந்து முதல் எழுத்து நீண்டு பால் என்றாயுள்ளது. இதுபோல் இடையுள்ள எழுத்து மறைந்து முதலெழுத்து நீண்டு சொல் உருவாவது வேறு இடங்களிலும் உண்டு. (ஒ.நோ. பெயர்–பேர்; பொழுது– போது). பகுதி (பால்வரை கிளவி. தொல். எழுத்.165), பிரிவு (பாலுங்கொளலும் வல்லோர், பதிற்று. 16,19) போன்ற பொருள்களில் பால் என்ற சொல் பன்னெடும் காலமாகத் தமிழ் வழக்கில் இருந்து வருகிறது. இச்சொல் இன்றும் கன்னடம், தெலுங்கு போன்ற திராவிட மொழிகளில் இப் பொருள்களில் பயன்பாட்டில் இருப்பது கவனிக்கத் தக்கது. (கன்னடம் பாலு – பிரிவு, பகுதி, பங்கு; பாலுகார –பங்காளி. தெலுங்கு பாலிவாடு – பங்காளி, பால்கொன்னாரு– பங்கு வகித்தார்). இன்றைய நிலையில் பால் என்ற சொல் பெருவழக்காக ஆண் பெண் பிரிவைச் (sex) சுட்டி நிற்கிறது. என்றாலும் இச்சொல் இலக்கணப்பால் (gender) பிரிவைச் சுட்டவும் பயன்பட்டு வருகிறது. மேலும் இலக்கணத்தில் ஒருமை, பன்மை வகைப்பாட்டிற்கும் (பன்மை பாலார் கூறுதல், தொல். சொல். 62 இளம்பூ.) அகத்திணைப் புறத்திணைப் பாகுபாட்டிற்கும் (சிலப். பதிகம் உரை 14) பயன்பட்டு வந்துள்ளது.

இலக்கணப்பால் பகுப்பைக் குறிக்கும் ஆங்கிலச் சொல்லான ஜெண்டர் (gender) பிரிவு வகை, பிரிவு, பால்போன்ற பொருளுடைய இலத்தீனச் சொல் ஜீனஸ் (genus) விருந்து உருவானதாகும். இங்கும் பால் என்ற பொருள் பிரிவு, வகை, பங்கு போன்ற பொருள் உள்ள சொல்லுடன் சேர்ந்து வந்திருப்பது தமிழில் பிரிவு, பகுப்பு, பங்கு போன்ற பொருள் கொண்ட பால் என்ற சொல்லுடன் இலக்கணப் பிரிவு (பால்) என்ற பொருளும் சேர்ந்திருப்பது போல் இருப்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

## இயற்கைப் பால்

மாந்த இனம், விலங்கினம், இவை போன்ற பிற உயிரினங்களில் ஆண், பெண் பிரிவுகளைக் காண்கின்றோம். உயிரற்ற பொருள்களில் ஆண், பெண் என்ற வேற்றுமை இல்லை. ஆக உலகத்திலுள்ள பொருள்கள் அனைத்தையும் 1. ஆண், 2. பெண், 3. ஆண் பெண் வேறுபாடு காட்டாதது என்ற முப்பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். இப்பகுப்பு இயற்கைப் பால் பகுப்பாகும். பெரும்பாலும் உயிருள்ளவை ஆண் பெண் வேறுபாடு காட்டுவனவாகவும், உயிரற்றவை ஆண் பெண் வேறுபாடு காட்டாதனவாகவும் இருக்கின்றன.

## இலக்கணப் பால்

இயற்கைப் பால் பகுப்பை ஒட்டியே மொழிகளில் வரும் பால் பகுப்பு இருக்கும் என நினைக்கத் தோன்றும். ஆனால் மொழிகளின் பால் முற்றிலுமாக இயற்கைப் பால்பகுப்புடன் ஒத்து வருவதாக இருக்காது. சான்றாகச் சில மொழிகளில் சூரியன், திங்கள் போன்ற உயிரற்ற பொருள்கள் முறையே ஆணாக, பெண்ணாகக் கொள்ளப்படுகின்றன. இதைப்போல ஆண், பெண் வேறுபாட்டினைக் காட்டும் விலங்கு, பறவை போன்றன உயிரற்ற பொருள்களைப் போல கொள்ளப்படுகின்றன. இவ்வாறு வருவதை இலக்கணப் பால் என்பர் (Everyman's Encyclopedia, 1978). பழைய ஆங்கிலம், இலத்தீனம், செருமன், கிரேக்கம், சமற்கிருதம் போன்ற மொழிகளில் பல உயிரற்ற பொருள்கள் ஆண்பாலாக அல்லது பெண்பாலாகக் கொள்ளப்படுகின்றன. இக்காலப் பிரஞ்சு, உரோமான்சு போன்ற மொழிகளில் ஆண், பெண் காட்டாத அஃறிணைப்பால் இல்லை.

## மொழி அமைப்பு

இலக்கணப்பால் பகுப்பினை ஆண், பெண் என இருக்கும் இயற்கைப்பால் பகுப்புடன் வைத்துக் குழப்பமடையக் கூடாது (Frank Palmer 1971:84,).. ஆணாக அல்லது பெண்ணாக இருப்பது, ஆண்கள் கூட்டமாக அல்லது பெண்கள் கூட்டமாக இருப்பது ஆண், பெண் பிரிவு (sex) ஆகும். மேற்போக்காக ஆண், பெண் என்ற பிரிவுடனும், ஆண், பெண் காட்டாத அஃறிணைப் பிரிவுடன் ஒத்துவரும் இலக்கணப் பகுப்பு (அல்லது அதன் வகைகளுள் ஒன்று) இலக்கணப்பால் (gender)ஆகும்1. இலக்கணத்தில் இடம்பெறும் பால்பகுப்பு வேறு; இயற்கையில் உள்ள பால்பகுப்பு வேறு. இலக்கணப் பகுப்பு உலக மொழிகள் அனைத்திலும் ஒரே வகையாக இருக்காது. இப்பகுப்பு மொழிக்கு மொழி வெவ்வேறு வகையாக இருக்கும்.

இலக்கணப்பால் பகுப்பு அந்தந்த மொழி அமைப்பிற்கு ஏற்றாற்போல் அமைந்திருக்கும். அவ்வகையில் தமிழின் பால் பகுப்பிற்குக் காரணம் தமிழ் மொழியின் அமைப்பே அன்றி வேறு எதுவும் இல்லை (அகத்தியலிங்கம். 1983:186).

### பாலும் எண்ணும்

தமிழ் இலக்கணம் ஆணைக் குறிக்கும் சொற்கள் ஆண்பால் என்றும், பெண்ணைக் குறிக்கும் சொற்கள் பெண்பால் என்றும், பலரைக் குறிக்கும் சொற்கள் பலர்பால் என்றும், ஒன்றினைக் குறிக்கும் சொற்கள் ஒன்றன்பால் என்றும், பலவற்றைக் குறிக்கும் சொற்கள் பலவின்பால் என்றும் குறிக்கிறது. இவற்றுள் ஆண்பால், பெண்பால், பலர்பால் மூன்றும் உயர்திணை பாற்படுவன (தொல். சொல். 2,3). ஒன்றன்பால், பலவின்பால் ஆகிய இரண்டும் அஃறிணை பாற்படுவன. இந்த ஐந்துவகைப் பால்பிரிவில் பால், எண் ஆகிய இரண்டும் சேர்ந்து இருக்கின்றன. இவற்றில் பால் பகுப்பினை மட்டும் பார்த்தால் ஆண்பால், பெண்பால், அஃறிணைப்பால்2 (neuter) என்ற மூன்று இருப்பதைக் காணலாம். எண் அடிப்படையில் ஒருமை, பன்மை இருக்கின்றன.

தமிழ் இலக்கணங்கள் எண்ணையும் பாலையும் ஒன்றாகச் சேர்த்துப் பகுத்துள்ளன. தமிழில் பாலும் எண்ணும் ஒரே ஈற்றினால் சுட்டப்படும் சிறப்பானப் பண்பை உணர்ந்தே அவ்வாறு பகுத்துள்ளனர். சான்றாக –ன் (எ–டு:மகன்) என்ற ஒட்டு ஆண்பாலை மட்டுமன்றி ஒருமையையும் காட்டுகிறது. இது போல் –இ (எ–டு:தோழி), –ள் (எ–டு:மகள்) ஆகிய ஈறுகள் பெண்பாலை மட்டுமன்றி ஒருமையையும் காட்டுகின்றன. –து (அது) என்ற ஒட்டு அஃறிணையையும் ஒருமையையும் காட்டுகிறது. இவ்வாறு இருந்தாலும் தமிழில் எண் பகுப்பைத் தனியாகக் காணவேண்டுவதில்லை எனக் கொள்ளக் கூடாது. ஐம்பால்களுள் ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால் என்பன ஒருமை எண்ணுள்ளும் பலர்பால், பலவின்பால் என்பன பன்மை எண்ணுள்ளும் அடங்கும்.

### திணை

மனித இனத்திற்கும் பிற உயிரினங்களுக்கும் வேற்றுமை உண்டு. இவ்வேற்றுமை அடிப்படையில் தமிழில் திணைப் பாகுபாடு அமைந்துள்ளது. திணை அடிப்படையில் உயர்திணை, அஃறிணை எனச் சொற்கள் இருவகைப்படும். இந்த இருதிணைச் சொற்கள் ஐந்துபாலாகப் பிரிவுபடுகின்றன. ஒரு சொல்லின் பால் பிரிவை அறிந்தால் அது உட்படுகின்றன திணையை அறிந்துகொள்ளலாம். இதைச் சேனாவரையர் திணையுணராக்கால் அதன் உட்பகுதியாகிய பால் உணர்தல் ஆகாமையின், பாலறிகிளவி எனலே திணை அறிதலும் பெறப்படும் (தொல்.சொல்.1) என்று குறிப்பிடுவார். பால் எனலே திணையும் அடங்கும். பால் தன்மையை அறியும் பொழுது அது உட்படுகின்ற திணையும் வெளிப்படையாகிவிடுகிறது.

### அடிப்படை

தமிழில் பின்னொட்டுக்களாகவே பால் ஈறுகள் வருகின்றன. இவை கட்டுருபன்களாக (bound morpheme) இடம்பெறுகின்றன. இலக்கணபால் தன்மையினை உருபன், தொடரியல்(morpho–syntactic) அடிப்படையில் காணலாம் என்பார் பால்மர் (Frank Palmer 1971:84,). அதாவது சொல்லின் வடிவம் அச்சொல் சொற்றொடரில் பிற சொற்களோடு கொள்ளும் இயைபு ஆகியவற்றின் அடிப்படையில் காண வேண்டும் என்பதாகும். சுபானிசு(Spanish), இத்தாலி போன்ற மொழிகளில் பெயர்ச் சொல் வடிவம் அதன் பால் தன்மையைக் காட்டுகிறது. அம்மொழிகளில் பெரும்பாலும் –ஒ வில் முடியும் சொற்கள் ஆண்பாலாகும். –அ வில் முடியும் சொற்கள் பெண்பாலாகும். இதைப்போல் தமிழில் ஆண்பால் பெண்பால் ஆகியவற்றிற்கு முறையே –ன், –ள் ஈறுகள் இருக்கின்றன. இருந்தாலும் பாலை (எண்ணையும்)க் குறிக்க பெயருடன் இவ் வீறுகள் கட்டாயம் இடம்பெற வேண்டும் என்பதில்லை (Subramanyam 1971:124,). இவ்வாறிருக்க சொல் வடிவத்தை வைத்து எல்லா இடங்களிலும் சொல்லின் பால் தன்மையினை அறிய முடியாது. அதனால் பால் சொற்களின் பொருள்–இலக்கண (lexico–grammatical) அடிப்படையில் அமைகிறது. அதாவது சொற்பொருள் அடிப்படையில் அமைவதும் இலக்கணப்படி பாலின் இக்கூறினை வேறுபடுத்திக் காட்டும் பிற சொல் வகைகளுடன் இயைபு கொண்டு வருவதும் ஆகும் என்பார் ஆந்திரநோவ் (Andronov 1970: 55).

பொதுவாகத் தமிழ்ப் பெயர்ச் சொற்களைப் பால் தன்மையினைக் காட்டும் ஒட்டுகளைக் கொண்டவை என்றும், ஒட்டுகள் எதுவும் இல்லாமல் இருப்பவை என்றும் இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். இவற்றுள் ஒட்டுகள் இல்லாமல் வரும் இரண்டாவது பிரிவே பெரும்பான்மை. இவற்றின் பால் தன்மை இவை உணர்த்தும் பொருளால் அறிந்து கொள்ளலாம் என்பது பெறப்படும். வடிவம், பொருள் ஆகியவற்றால் பால் அறிவதால் பெயரின் முழுத் தன்மையும் பால் காட்டுவதாக இருக்கிறது எனக் கருதலாம். இதை வினைச் சொற்களின் இறுதி ஈற்றினால் பால் உணர்த்துவது போலல்லாமல் பெயர்ச்சொற்களின் முழுச்சொல்லுமே பால் உணர்த்துவதாக அமைகிறது என்று விளக்குவார்

சண்முகம். இதற்குப் பெயர்களுள் அவ்வவ் பாற்குரிய பெயரைப் பாலறி கிளவியாகக் கொள்க (தொல்.பெயர்.7) என வரும் தெய்வச்சிலையார் கூற்றையும் அரணாகக் காட்டுவார் அவர் (சண்முகம், 1984: 137).

### இணை

பெயர்களின் பால் ஈறுகளுடன் இருப்பனவற்றைப் பால் தன்மையை வெளிப்படையாகக் காட்டுவன என்றும் பால் ஈறுகள் இல்லாமல் வருவனவற்றை மறைமுகமாகப் பால் உணர்த்துவன என்றும் கருதலாம் (Greenberg 1978:54). .பாடகன் – பாடகி; வண்ணான்– வண்ணாத்தி; ஆசிரியன் – ஆசிரியை; மகன்– மகள் போன்று ஆண் பெண் இரண்டிற்கும் இணையாக வரும் பெயர்ச் சொற்கள் பல உள்ளன. அதே நேரத்தில் ஆண்பால் சொற்கள் சிலவற்றிற்கு இணையான பெண்பால் சொற்கள் இருக்கா. எ–டு: சேரன், சோழன், கணவன். இதைபோல் பெண்பால் பெயர்ச் சொற்கள் சிலவற்றிற்கு இணையான ஆண்பால் சொற்கள் இருக்கா. எ–டு: மனைவி, செவிலி. ஆண்பால் பெயர்களுக்கு இணையாகப் பெண்பால் சொற்களாக அல்லது பெண்பால் சொற்களுக்கு இணையான ஆண்பால் சொற்களாகச் சிலர் சொல் படைக்க முயல்வதை நாம் அறிவோம். நண்பி (நண்பன்), இளைஞி (இளைஞன்) (முத்துவீரப்பன் 1988:11).

### பெயரின் பால்தன்மை

தமிழில் பெயர்ச் சொற்கள் வினைச் சொற்கள் ஆகிய இரண்டும் பால் காட்டுவனவாக இருக்கின்றன. இருந்தாலும் பெயரின் பால் தன்மையே முதன்மை வாய்ந்தது ஆகும். பெயரின் பால் தன்மைக்கு ஏற்பவே வினையின் பால் தன்மை அமையும். பால்பகுப்பு சிறப்பாகப் பெயர்களுக்கே உரியதாகும். பெயர் பால்பகுப்பு (classification), இயைபு (agreement) என்ற இரண்டு அடிப்படைத் தன்மைகளை உள்ளடக்கியதாகும். இவை இரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக இருக்கின்றன. இயைபினால் பால் பிரிவும் பால் தன்மையினால் இயையும் குறிக்கப்படுகின்றன (Greengerg 1978:50).

### ஆறு பால்

தமிழ்ப் பால்பாகுபாடு பதில் மாற்றக் கொள்கையின் அடிப்படையில் அமைந்துள்ளது. அவன், அவள், அவர், அது, அவை என்ற பகரப் பெயர்களை எடுப்பவையாக ஐம்பால் அமைவதைக் காணலாம். இன்றைய பேச்சு வழக்கில் பலர்பால் உயர்வு ஒருமைக்குப் பயன்படுத்தப் படுவதையும் –கள் விகுதி சேர்த்துப் பலர்பால் உருவாவதையும் எடுத்துக்காட்டிப் பால்பகுப்பு ஆறாக அமைவதை விளக்குவார் பொற்கோ (பொற்கோ 1989:46). இப்பகுப்பின்படி

அவன் – ஆண்பால்
அவள் – பெண்பால்
அவர் – உயர் பால்
அவர்கள் – பலர்பால்
அது – ஒன்றன்பால்
அவை – பலவின்பால்

இக்காலப் பேச்சு வழக்கில் ஆண்பன்மை, பெண்பன்மை ஆகியவற்றைத் தனித்தனி பாலாகக் கொள்ளப்படுவதைச் சில கிளை வழக்குகளில் காணலாம். இவ்விடங்களில் ஆண்பன்மை, பெண்பன்மை வினைமுற்றிலும் காணப்படுகின்றன (பரமசிவம் 1991:129).

எ–டு: அவனுக வந்தானுக
அவளுக பேசிட்டுத் திரியுறாளுக

என்றாலும் ஆண்பன்மை, பெண்பன்மை ஆகியவற்றைத் தனித்தனியாகக் கொள்ளும் அளைவிற்குப் பரவலாக வழக்கூறவில்லை.

### பன்மை

பெரும்பாலும் உயர்திணைப் பன்மையில் பால்தன்மை அறியப்படுவது இல்லை. ஆனால் ஆடவர், மகளிர், ஆண்கள், தேவியர் போன்ற சொற்கள் பால் உணர்த்துவனவாக உள்ளன. இவற்றை வைத்துத் தமிழில் பன்மையில் ஆண், பெண் பிரிவு உண்டு என கருதத் தோன்றும். ஆனால் இச்சொற்கள் வினைமுற்றில் பால் காட்டாத பன்மை ஈற்றையே கொள்கின்றன. மேலும் இவை யாவும் அவர் என்ற பலர்பால் பகரப் பெயரையே கொள்கின்றன. பெயரில் பால் உணர்த்தும் இவை வினைமுற்றில் பால்காட்டாத பிற சொற்கள் இயங்கும் நிலை போன்று இருப்பதால் இவற்றைத் தனியாகக் கொள்வது இல்லை.

### பொதுப்பால்

பொதுவாக உயர்திணை ஒருமையில் பால் தெரியும். ஆனால், குழந்தை, பிள்ளை போன்ற சில சொற்கள் உயர்திணை ஒருமை சொற்களாக இருந்தாலும் பாலுணர்த்தாமல் சில இடங்களில் வருகின்றன. பெரும்பாலும் இச்சொற்கள் அஃறிணை வினைமுற்றுகளையே கொள்வதால் (குழந்தை அழுதது, பிள்ளை வந்தது) இவை அஃறிணைகளாகவே கருதப்படுகின்றன எனக் கொள்ளலாம். அதே நேரத்தில் உயர்திணைப் படுத்திச் சொல்லும்பொழுது (குழந்தை அழுதான், பிள்ளை வந்தான்) வினைமுற்றின் தன்மையால் அதன்பால் தன்மையை அறிந்து கொள்ளலாம்

### அலி

பாலின உறுப்பு (விந்தணுகளையும் கருமுட்டை அணுகளையும் தோற்றுவிக்கும் உறுப்பு) அடிப்படையில்தான் ஒருவரது பால் தன்மை (ஆண் அல்லது பெண் அல்லது அலி) அமையும். விந்தணு மட்டும் சுரக்கும் பாலின் உறுப்பு உள்ளவர் ஆண். கருமுட்டைகள் சுரக்கும் பால் இன உறுப்பு உள்ளவர் பெண். விந்தணுக்களும் கரு முட்டைகளும் ஒரே நேரத்தில் அல்லது ஒன்றன்பின் ஒன்றாகச் சுரக்கும் பாலின உறுப்பு உள்ளவர் அலி ஆவார் (Encyclopedia Britannica).

உயர்திணையில் ஆணும் அல்லாமல் பெண்ணும் அல்லாமல் இருக்கும் அலிகளை எந்தப் பாலில் அடக்கவேண்டும் என்பதைப் பற்றித் தமிழ் இலக்கணம் குறிப்பிடுகிறது (தொல்.சொல். 4, நன். 464). ஆண்மை திரிந்து பெண்மை கொண்டவன் பேடி. பெண்மை திரிந்து ஆண்மை கொண்டவன் பேடன். இவ்விருவருக்கும் பொதுபெயர் பேடு. இம் மூவருக்கும் பலர்பாற்பெயர் முறையே பேடியர், பேடர், பேடுகள் என்பன (பாவாணர், தொல்.சொல். 4 அடிக்குறிப்பு). பால் தன்மை திரிந்ததற்குப் பின் உள்ள நிலை அடிப்படையிலேயே பால் குறிக்க வேண்டும் என்பதாகும். ஆண், பெண் இரண்டு தன்மைகளுள் எத் தன்மை அதிகமாக உள்ளதோ அதை வைத்துக் குறிப்பிட வேண்டும் என்கிறது நன்னூல் காண்டிகையுரை குறிப்பு (நன்.264, கழகப் பதிப்பு,1974). அதிகமாக உள்ள தன்மை என்னும் பொழுது திரிபுக்குப் பின் உள்ள நிலையையே குறிப்பதாக இருக்கிறது. திரிபுக்கு முன்னுள்ள நிலை எதுவாக இருந்தாலும் கொள்ள வேண்டியது இல்லை.

### அஃறிணை

மாந்தன் அல்லாத உயிர்களான விலங்கு, பறவை முதலியவற்றிலும் ஆண், பெண் உண்டு. தமிழில் இவற்றின் ஆண் பெண்களைக் குறிக்கச் சில இடங்களில் தனித்தனித் சொற்களும் உண்டு. இருந்தாலும் தமிழ் மொழி அமைப்பில் இவற்றின் ஆண், பெண் ஆகியவற்றைப் பிரித்துச் சொல்ல இடமில்லை. மாந்தர் அல்லாதன உயிர் உள்ளவை ஆனாலும் உயிர் இல்லாதவை ஆனாலும் வேறுபாடு இல்லாமல் குறிக்கப்படுகின்றன.

அஃறிணை ஒருமையில் உயிர்களில் ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் தனித்தனி சொற்கள் உள்ளவை என்றும், தனித்தனி சொற்கள் இல்லாமல் பொதுச் சொற்களால் குறிப்பவை என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். ஆணுக்கும் பெண்ணுக்கும் தனித்தனிச் சொற்கள் உள்ளவை சிலவாகும். ஆணுக்கும் பெண்ணுக்கும் தனித்தனிச் சொற்கள் இல்லாதவை மிகப் பலவாகும். பால்விளங்காத பொதுச் சொல்லின் முன் ஆண் பெண் ஆகிய பால் வழங்கும் சொற்களை அடைகளாகச் சேர்த்து அவற்றின் பால் காட்டும் தன்மைகளை வெளிப்படுத்துதலும் உண்டு.

எ–டு: ஆண் நாய், பெண் நாய்

ஒன்றன்பாலில் உயிரிகளில் ஆண் பெண் இருந்தாலும் தமிழ் மொழி அமைப்பில் ஒன்றன்பால் விலங்கு, பறவை ஆகியவற்றின் சொற்கள் பால்பகுப்பிற்கு இடம் தராமல் ஒன்றன் பால் ஈறுகளையே ஏற்கும். மேலும் ஆணுக்கும் பெண்ணுக்கும் தனித்தனிப் பகரப்பெயர் வராமல் ஒன்றாக வருகிறது.

அஃறிணை ஒருமைப் பெயர்கள் பொதுவாக எவ்வகை ஒட்டும் இல்லாமல் இருக்கின்றன. எனவே அஃறிணையைக்காட்டுவதற்கென பெயர்ச்சொற்களின் எதுவும் இல்லை எனக் கொள்ளலாம். என்றாலும் அஃறிணை ஒருமைப் பகரப் பெயரான அது –து விகுதியுடன் இருக்கிறது.

### பெண்பால் இன்மை

மலையாள மொழியில் வினைமுற்று ஆண், பெண், அஃறிணை என்ற பால்பகுப்பு காட்டுவதில்லை. ஆனால் வினையாலணையும் பெயரில் இப்பகுப்பு காணப்படுகிறது. அவன், அவள், அது என்ற சுட்டுப்பெயர்களில் முப்பால் பகுப்பு காணப்படுகிறது. மூவிடப் பெயர்களையும் வினைமுற்றையும் வைத்துப்பார்த்தால் தெலுங்கில் ஆண்பால். ஆண்பால் ஒழிந்த பிற என்பதே அங்கு ஒருமையில் காணப்படும் பகுப்பாகும். பன்மையில் தமிழைப் போன்று பலர்பால், பலவின்பால் இருக்கின்றன. ஆண்பால் சொற்களெல்லாம் ஒரு பிரிவு. இதில் பெண்பால் என்ற தனிப் பால்பிரிவு இல்லை. பெண்பால் சொற்களாகக் கருதப்படுவன அஃறிணையுள் அடங்கும். குருக், மால்தோ, கொலாமி போன்ற மொழிகளிலும் இப்பகுப்புத்தான் உள்ளது. இங்குப் பெண்பால் ஒருமை அஃறிணையாகும். இதற்குரியதாய் வரும் பகரப்பெயரும் அஃறிணையாகக் கருதுகின்றனர் என்பர் சிலர். தமிழில் சில கிளைமொழி வழக்குகளில் பெண்பாலை அல்லது ஆண்பாலைக் குறிப்பதற்கு ஒன்றன்பால் சொல் வழங்கப்படுகிறது. இது மரியாதை நிமித்தம் சொல்லப்படுவதாகக் கருதுகின்றனர். இவ்வடிப்படையில் பார்த்தால் பெண்களை அஃறிணையாகக் கருதினர் எனக் கொள்வது அவ்வளவு சரியானதாகப் படுவதில்லை.

தொல் திராவிடத்தில் பெயர்கள் திணை –பால் வேறுபாடு இல்லாதனவாய் இருந்து பின்னர் ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொரு வகையாகத்

திணை– பால் வளர்ந்திருக்க வேண்டும் எனக் கருதுகிறார் கால்டுவெல் (Caldwell 1987:20). அரசன், அரசி எனப் பால் காட்டும் சொற்கள் அரசு என்ற சொல்லிலிருந்து உருவாகியிருக்க வேண்டும் என்று அவர் கருதுவதனால் இவ்வாறு குறித்துள்ளார். இவ்வடிப்படையில் தெலுங்கு போன்ற மொழிகளில் பால் தன்மை தமிழ் கன்னடம், போன்ற மொழிகளிலிருந்து வேறு வகையாக வளர்ந்திருக்கிறது எனக் கொள்ளலாம்.

### இயைபு

பெயரின் பால் தன்மை சொற்றொடரின் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட வடிவங்களுடன் இயைபு கொண்டதாக இருக்கும். சுட்டு, பெயரடைகள், பகரப்பெயர் போன்றவற்றுடன் இயைபு கொண்டிருக்கும் (Greengerg 1978: 50). தமிழ் மொழி அமைப்பில் பெயரின் பால் தன்மை வினைமுற்றின் பால் தன்மையுடன் ஒத்து வர வேண்டும் (தொல். சொல்.11). பெயர், வினை இரண்டிற்கும் இடையே பால் தன்மை ஒத்து வராமல் இருப்பது பால் வழுவாகும். பெயரடை போன்றன பெயரின் பால் தன்மைக்கேற்ப மாற்றம் கொள்வது இல்லை. ஆனால் பரப்பெயர் (அவன், அவள், அது) பெயரில் பால் தன்மைக்கேற்ப அமையும்.

### முடிவுரை

பால்பகுப்பு தமிழ்மொழி அமைப்பில் ஓரளவிற்குத்தான் இயற்கைப் பால் பகுப்புடன் ஒத்து வருகிறது. உயர்திணை ஒருமையில் தான் பால் தெரியும். உயர்திணைப் பன்மையில் பெரும்பாலும் பால் தெரியாது. பாலறி ஈறுகள் சொல்லின் இறுதியில் கட்டுருபன்களாக இடம்பெறும். பெயரெச்சம் போன்றன பெயரின் பால்தன்மைக்கேற்ப மாற்றம் கொள்வதில்லை. ஆனால் பகரப்பெயர் பெயரின் பால் தன்மையைக் காட்டுவதாக இருக்கும். விலங்கு, பறவை போன்றவற்றில் காணப்படும் ஆண், பெண் வேற்றுமை தமிழ் இலக்கணத்தில் குறிப்பிடப்படுவதில்லை. உயர்திணையில் ஆண், பெண் ஆகியோரைக் குறிக்கும் சொற்கள் மட்டுமே ஆண், பெண் பாலைக் காட்டுகின்றன. பிற பொருள்களைச் சுட்டும் சொற்கள் அனைத்தும் அஃறிணைப் பாலாகக் கருதப்படுகின்றன.

### அடிக்குறிப்பு

1.Sex: being male or female or hermaphrodite, males or female collectively; Gender: grammatical classification (or one of the classes) of objects roughly corresponding to the two sexes and sexlessness, Oxford English Dictionary, 1983

2.இங்கு அஃறிணை எனக் குறிப்பிடுவதைத் தமிழ் இலக்கணத் திணைப்பகுப்பில் வரும் உயர்திணை அல்லாத எனக் கொள்ளக்கூடாது. திணைப் பகுப்பில் பகுத்தறிவு அடிப்படையில் மனிதர் (தேவர், நரகர்) போன்றோர் உயர்திணையின் பாற்படுவர். பகுத்தறிவு அற்ற விலங்குகள், பறவைகள், உயிரற்ற பொருள்கள் போன்ற அனைத்தும் அஃறிணையின் பாற்படுவனவாகும். ஆனால் இங்கு ஆண், பெண் வேறுபாட்டினைக் காட்டும் விலங்குகள், பறவைகள் போன்றன அஃறிணை எனக் கொள்ளப்படுவது இல்லை. அதாவது அஃறிணை என்பது உயிரில்லாப் பொருள்களைக் குறிப்பதாகும்

### கருவி நூல்கள்


1.அகத்தியலிங்கம், ச.,1983, திராவிட மொழிகள்–2

2.சண்முகம், செ.வை., 1984, சொல்லிலக்கணம் கோட்பாடுகள்–1, 3.தொல்காப்பியம்.சொல்லதிகாரம், சேனாவரையர் உரை

4.பரமசிவம், கு., 1991, இக்காலத் தமிழ் மரபு, கழகம், சென்னை

5.பாவாணர், (தேவநேயப் பாவாணர்), தொல்.சொல். 4 அடிக்குறிப்பு

6.பொற்கோ, 1989, தமிழ் இலக்கணக் கோட்பாடுகள், தமிழ் நூலகம் ஆழ்வார்பேட்டை, சென்னை.600 018

7.முத்துவீரப்பன், பழ.,1988 வ.சுப. மாணிக்கனாரின் சொல்லாக்கம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை

8.Andronov, M.S.,1970, Dravidian Languages, Nauka Publishing House, Central Department of Oriental Literature, Moscow

9. Caldwell, Robert, 1987, A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages, AES, New Delhi (first published 1913)

10.Encyclopedia Britannica, 1978, Macropedia, The University of Chicago

11.Everyman's Encyclopedia, 1978, London

12.Greengerg, Joseph H., 1978, Universal of Human Language, vol.3,

14.Palmer, Frank, 1971, Grammar, Penguin Books, New Jersey

15.Subrahmanyam, P.S.,1971, Dravidian Verb Morphology, Annamalai University

# சுடர் தந்த சுல்லும் நுல்லும்

சென்ற இதழின் தொடர்ச்சி



**இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா

சுல் எனும் வேரடியினின்று தோன்றும் குத்தல், துளைத்தல் எனும் மூலக் கருத்தினின்று தேய்தல், வெப்பம், ஒளி எனும் கிளைக் கருத்தும் தோன்றும்.

சூரியன் எனுஞ் சொல் ஒரு காலத்தில் வடசொல் எனக் கருதப்பட்டது. ஆனால் மார்கறல் கார்த்திகேயனார் எனும் அறிஞர் பெருமகன் இச்சொல்லின் வேர் மூலம் சுல் என நிறுவி 1913 ஆம் ஆண்டு வெளியிடப்பெற்ற தம் மொழி நூல் எனும் நூலில் விளக்கியுரைத்தது குறிப்பிடத்தக்கதாகும்.

'சித்திரமாவது ஐவகை வருணங்களாலாதல், எழுவகை வருணங்களாலாதல், எழுதப்படுவதோர் உண்மைக்காட்சிப்பேறாகலின், அச்சித்திரமென்னுஞ் சொற்கு அப்பொருள், அவ்வருணங்களையுடைய சூரியன் காரியமாகிய சுல்லென்னுந் தாதுவினின்று தான் பெறல் வேண்டும்.

சேர்த்தலென்பது திரட்டலையுணர்த்தும். அதாவது குவித்தல். இப்பொருள் சேர்த்தலென்னுஞ் சொல்லில் எங்ஙனம் அமைந்துள்ளது என ஆராய்வார்க்கே அநுசூத சம்பந்தத்தின் உண்மை வலி வுறா நிற்கும். இங்ஙனமே வளைதல், கோணல், நடு, பொது, துளைத்தல் முதலிய சொற்களையும் ஆராய்தல் வேண்டும். வட்டமென் னுஞ்சொல்லுக்கும் O இவ்வடிவமாகிய வட்டப்பொருட்கும் இயைபு எவ்வாறெனில் வட்டவடிவுடைய சூரியன் காரியமாகிய சுல் லென்னுந் தாதுவினின்றுதான் அநுசூத சம்பந்தத்தால் அவ்வி யையுபெறல் வேண்டும். சூடென் னுஞ்சொல்லுக்கும் வெப்பமாகி தீயினது தன்மைக்கும் இயைபு எவ்வாறெனின் தீயினது தன்மை யுடைய சூரியன் காரியமாகிய சுல்லென்னுந் தாதுவினின்று தான் அவ்வியையு பெறல் வேண்டும். பிறவு மன்ன.

அற்றேல் சுல்லென்னுந் தாதுவிற்கும் சூடென்னுஞ்சொல் லுக்கும் இயைபுள்ளது. வட்டமென்னுஞ் சொல்லுக்கு அவ்வியை பில்லையேயெனின், நன்று? சூடென்னுஞ்சொல் அததாதுவிற்குச் சமீப சம்பந்தம்; வட்டமென்னுஞ்சொல் தூரசம்பந்தமென்க. ஒர்மாத்தினது வித்தையும், பூவையும் தனித்தனிக்காட்டின் அச் சம்பந்தம் புலப்படாது; வித்தினின்று முளையும் முளையினின்று செடியும், செடியினின்று பராரையும், பராரையினின்று கவடும், கலட்டினின்று கோடும், கோட்டினின்று வளாரும், வளாரினின்று இலையும், இலையினின்று அரும்பும், அரும்பினின்று மலரும் தத் தம் இயைபுவிடாது உண்டாவதைக்கண்ணிற்குக் காட்டிப் பிறகு அவ்வித்தையும் பூவையுங்காட்டின் அச்சம்பந்தம் ஐயமறப் புலப்படும். அதுபோல் சுல்லென்னுந்தாதுவினின்று வழிவழியாகப் பிரிந்து வருஞ்சொற்களையும் ஆராய்ந்து கொண்டே செல்லின் அத் தாதுவிற்கும் வட்டமென் னுஞ்சொல்லிற்கும் உள்ள சம்பந்தம் நன்கு புலப்படும். இவ்வையப்பாடெல்லாம் மேலை முதனிலையியலை ஆராயுங்கால் இல்லாது போய் விடும்." ( மொழிநூல் பக் 71– 72)

இங்குச் சுல் எனும் வேரடிக்கு வளைவெனும் வட்டக் கருத்தையும் சேய்மைத் தொடர்பாய்க் கார்த்திகேயனார் கூறுவதும் கவனிக்கத் தக்கது. உண்மையில் சுல் என்பதற்கு வளைவுக் கருத்தைப் பாவாணர் மூலக் கருத்தாகத் தெளிவுறவே விளக்கியுரைத்துள்ளார். இது, வேரால் தொடப்படும் பொருள் மெல்லிதல்லாமல் வல்லிதாயின் துளைக்க முடியாமல் அவ்வேர் வளைந்து செல்லும் வினையால் விளைந்த கருத்தாகும். அவ்வாறே சுல் என்பதற்குப் பன்னூற்று வளைவு அல்லது வட்டப் பொருட் சொற்கள் தோன்றின.

ஆனால் சூரியன் வளைவுப் பொருளில் அல்லாமல் குத்தல் பொருளில் தோன்றியதாகும்.

உல் > சுல் > சுர் > சூர் > சூரி > சூரியன்

சூரிய ஒளி ஊசி போல் குத்தித் துளைத்தெடுப்பதால் அக்கருத்தினின்று பிறந்த தூயதமிழ்ச் சொல்லே சூரியன்.

ஒளி வெப்பமாக மாறுவதும் வெப்பம் ஒளியாக மாறுவதும் ஆற்றல் நிலையில் நிகழும் மாற்றங்கள். சூரியன் வெப்பத்தையும் ஒளியையும் வழங்குவது. இதனால் எரித்தல், துளைத்தல் முதலான வினைகளும் நிகழும். சூரிய ஒளியைக் கூர்மையாய்ப் புள்ளியென ஓரிடத்தில் குவிக்கும் வேளை கடும் வெப்பம் ஏற்பட்டுத் தீப் பிடிப்பதையும் காணலாம். இஃது இயற்கை வினை.

சூரிய ஒளி மண்டையில் குத்தும் வேளை, சுல்லெனக் குத்துகின்றது என்றும் சுர் எனக் குத்துகின்றது என்றும் சுலீர் , சுரீர் என்றும் மக்கள் வழக்கில் இருப்பதையும் காணலாம்.

எனவே இவண், வெப்பம், சூடு, ஒளிப் பொருளில் சுல் எனும் வேர் விளங்கித் தெளிவுறுத்துவதை நாம் உணரலாம்.

சுல் > சொல் எனத் திரிபுறுமாதலால் சொல்லும் ஒளிப் பொருளையே நல்கும்.

சொல்லின்றே சொலிர் , சொலிப்பு முதலான ஒளிச் சொற்கள் உருவாகின.

நெல்லுக்கும் மூலமும் ஒளியே.. எனவே ஒலி தந்த சொல்லுக்கு நெல்லும் பொருளாயிற்று. சொல் = நெல் .
சோற்றுக்கும் சொன்றிக்கும் சோளத்திற்கும் சோழருக்கும் சொல்லே வேர்.

இனி, தீயொளி சிவந்து தோன்றும் எனவே சுல் சிவதற் கருத்தையும் நல்கி ,
சுல் > செல் > செய் > சேய் > சேயோன் என்றாகிச் சூரியனையே உணர்த்திற்று. தொல்காப்பியம் கூறும் சேயோன் உண்மையில் சிவந்த சூரியனையே சுட்டுகின்றது. பின்னர் அது முருகனுக்கு ஆகிவந்தது.

ஒளியைச் சுட்டிய சுல் சொல்லாகி உலகத்தின் பல்வேறு மொழிகளில் சூரியனை நேரடியாகவும் திரிந்தும் வழங்குவது விந்தையே.

சுல்> சொல் > Sol

| | | |
|---|---|---|
| sol | Latin | ancient language |
| sol | Old Icelandic language | the language of West Scandinavian subgroup of German languages, used until the middle of XIV c. by immigrants from modern Norway (the Vikings), which settled Island. |
| sol | Old Swedish | (around 1375–1526) |
| sol | Old Danish | Old Danish (1100–1525) is the predecessor of Modern Danish and Norwegian Bokmol. |
| sol | Asturian | (Asturian; asturianu, formerly also known as bable) is a West Iberian Romance language spoken in Principality of Asturias, Spain. |
| sol | Aragonese language | is a Romance language, that was spoken on the territory of Aragon Kingdom in Spain |
| sol | Galician | (Galego), Iberian–romanic subgroup of Roman group of languages (Spain) |
| sol | Danish | Danmark |
| sol | Icelandic | (islenska) – the language of Icelanders (Scandinavian group of German languages). |
| sol | Spanish | Spain |
| sol | Catalan | Spain |
| sol | Castilian | (Spain, Andorra) |
| sol | Extremaduran | Ibero–romanic dialect, spoken on south–western Spain |
| sol | Valencian | a linguistic variety spoken in the Valencian Community, Spain |
| sol | Balear Catalan | Palma island (Mediterranean sea) |
| sol | Ladino | (self–name: Lingaz ladin) belongs to retoroman subgroup roman group Indoeuropian language family. Alternative name is Sephardic or Judeo–Spanish colloquial and written language of Spanish Jews. The endangered language. |
| Sol | Fala | Portugal, at the border with Spain |
| sol | Mirandese | Romanic language, spoken by the people of small territory in North–East Portugal |
| sol | Portuguese | Romance; Indo–European; Portugal, originating in the Iberian Peninsula of Europe. |
| sol, sola | Norwegian | Norway |
| sol | Gjestal Norwegian | Norway |
| sol, sul | Piedmont (Piemontese) | Language spoken in Piedmont, region in the Northwest of Italy. |
| sol (sel) | Faroe (Faroese) | (self–name: Foroyskt mal) language of Freres, that inhabit the Faroe Islands (an autonomous region of Denmark). Descendant language of Normanns (immigrants from the South–West Norway). |
| sol | Swedish | The language of east subgroup of scandinavian group, spoken in Sweden, some part of Finland and on autonomous Aland islands. |
| sol | Nones | Nones is a dialect named after and spoken in the Non Valley in Trentino, Northern Italy. |
| sol | Emiliano Carpigiano | Italy |

| | | |
|---|---|---|
| sol | Emiliano Ferrarese | Italy |
| sol | Korlai | western seashore of India |
| solo | Dyimini | Ivory Coast (Africa) |
| sal | Garo | Bodo–Garo; Sino–Tibetan; AsiaAssam, India. |
| sal | Lalung | Lalung (or Tiwa) is a Sino–Tibetan language of Assam in North East India. |
| Sal | Riang | Riang is a Mon–Khmer language of Burma and China. |
| sole | Venetian | Venetian language is an ancient language of Venet tribe, representing separate branch of Indo–European languages (ousted by Latin language) There are two unrelated Venetian languages, both associated with the Veneto region on North–East of Italy. |
| sole | Italian | Italy |
| sole | Neapolitan | Dialect of Italian language |
| sole | Maceratese | Dialect of Italian language |
| sole | Neapolitan–Calabrian | South dialect of Italian language, spoken in Naples region and in Northern Caliber. |
| sole | Norman | The language spoken in northern France in Normandy and the Channel Islands. |
| sole | Nynorsk | a variant of Norwegian language |
| sola | Norwegian | (Nynorsk) |
| sole | Sardinian | Self–name: Sardu. Sardinian language aroused from Latin dialects, spoken on Sardinia. (Romance; Indo–European; Europe) |
| sole (fr.) | Jerriais | (or Jersey French) is the form of the Norman language spoken in Jersey, in the Channel Islands, off the coast of France. |
| solea | Walloon | One of the Belgium languages (the Roman group), spoken in Belgium (Wallonia region), in France (the Ardennes department and some villages of Nor department) |
| soil | Gothic | the extinct East Germanic language that was spoken by the Goths. |
| soleil [solEj] | French | France |
| soleil | Cajun French | Dialect of French, spoken mainly in Louisiana (USA) |
| solely | Franco–Provencal | (Arpitan language) – Romanic language (Gallo–Roman subgroup), South–east of France, Roman Switzerland and North–west Italy |
| solelh | Occitan | a Romance language (or – Provencal) – the language of indigenous population of Occitania (the South of France), and some neighboring regions of Spain and Italy. It is divided into Northern–Occitan (Limousin, Auvergnat, Provencal alpin) and Southern–Occitan (Languedocian, Provencal, Gascon, Nicois). |
| solel | Chti (or Picard) | Picard is a regional language spoken in Northern France and also in Belgium, by a total of about 500,000 speakers. |
| solen | Norsk (bokmal) | Self–name: Norsk (Norway). There are two official forms of Norwegian language now – bokmal and nynorsk |
| soli | Corsican | (Self–names: Corsu, Corso, Corse, Corsi) – a dialect of Italian language. Corsica (France) and the North of Sardinia. |
| soli | Gallurese Sardinian | at the Northern part of Sardinia island (Italy) |
| sin | Eastern Frisian | Netherlands |

| | | |
|---|---|---|
| sin | Seeltersk | Saterland Frisian, also known as Sater Frisian or Saterlandic (Seeltersk), is the last living dialect of the East Frisian language. |
| sinne | Frisian | (self-name: Fryske talen) – the language of frisians (west group of German languages). Spoken mainly in Freeslandia province (Netherlands). |
| sin | Southern Bobo Madare | Burkina Faso (west part), Africa. |
| hun | Nothern Bobo Madare | Burkina Faso (west part), Africa. |
| zin | Gronings | Northern Netherlands |
| zin | Northern Low Saxon | Northern Low Saxon is a West Low German dialect. |
| zon3 | Brabantic | Belgium |
| zon | Limburgish | Belgium |
| zon, zoon | Dutch | Northern Europe |
| zon | West Vlaams language | Self-name: Vlaemsch. In the North part of Belgium and in Nor department in France. |
| zon (zun) | Yiddish | (Hebrew) – Juwish language of German group, historically main language of Ashkenazi, that was spoken at the beginning of XX century about 11 mln. of Jews in all over the world. |
| zon | Limburgish | (self-name: Limburgs) West Germanic language, that represents a set of dialects of south-east Netherlands |
| son | Afrikaans | (Boer) close to Dutch. Spoken in South Africa, Botswana, Malawi, Namibia, Swaziland, Zambia |
| sonn | Luxemburgeois | (self-name: Letzebuergesch) – a language of everyday communication of Luxemburg residents (Europe). |
| sonE | Swabian | Swabian is one of the dialect groups of Alemannic German that belong to the High German dialect continuum. It is spoken in Swabia, which covers much of the southwestern German state of Baden-Wurttemberg, including its capital, Stuttgart. |
| sonne | German | (Deutsche) |
| sonne | Middle Dutch | Middle Dutch is a collective name for a number of closely related West Germanic dialects whose ancestor was Old Dutch and was spoken and written between 1150 and 1500. |
| sunne | Middle Low German | (or Middle Saxon) is a language that is descendant of Old Saxon and the ancestor of modern Low German |
| sunne | Middle High German | between 1050 and 1350 |
| sunne (sun3) | Old Frisian | a West Germanic language spoken between the 8th and 16th centuries in the area between the Phine and Weser on European North Sea coast. |
| sunne | Old English | Old English language (Anglo-Saxon language) – an early form of English language, that was common on the territory of modern England and south Scotland from the middle of the 5th up to the middle of the 12th cent. |

